[6th March 1961

போடும்போது நோட்டீஸ் கொடுத்த அங்கத்தினர்கள் எழுந்து நின்றால் என்னுடைய வேலைக்கு அனுகூலமாக இருக்கும் என்று இந்த சபையின் கவனத்திற்குக் கொண்டுவரவிரும்புகிறேன்.

*Taxis*

* 620 Q.—SRI A. VEDARATHNAM : கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சென்னை நகரில் தற்சமயம் உள்ள பெரிய டாக்ஸி, பேபி டாக்ஸி, ஆட்டோ ரிக்ஷா இவை ஒவ்வொன்றின் எண்ணிக்கை என்ன ?

(இ) பிரயாண வசதிக் குறைவை நிவர்த்திக்கும்பொருட்டு பேபி டாக்ஸி, ஆட்டோ ரிக்ஷா இவைகளின் எண்ணிக்கையை அதிகரிக்க உத்தேசம் உண்டா ?

(உ) மேற்கண்ட வாகனங்கள் ஒவ்வொன்றிலும் எத்தனை நபர் பிரயாணம் செய்யலாம் ?

THE HON. SRI V. RAMAIAH : (a) Baby Taxis—1124, Big Taxis—107 Autorickshaws—261.

(b) Permits for taxis and auto-rickshaws are granted liberally to the applicants every month by the Regional Transport Authority, Madras, to meet the demand for transport facilities in Madras City.

(c) Auto-rickshaws—2 persons; besides the driver; Big taxis—5 persons, besides the driver; Baby taxis—3 or 4 persons, besides the driver.

9-30. a.m. SRI A. VEDARATHNAM : இன்னும் பேபி டாக்ஸிகள், ஆட்டோ ரிக்ஷாக்கள் இவைகளுக்கு விண்ணப்பங்கள் நிரம்ப வந்திருக்கின்றனவா ? இப்பொழுது டாக்ஸிகளின் பற்றாக்குறை காரணமாக ரயிலில் வருகிற பிரயாணிகள் மணிக்கணக்கில் காத்து நின்று வாகன வசதிக்காகத் திணறுகிறார்கள். ஆகவே, இதை நிவர்த்தி செய்ய இன்னும் அதிக டாக்ஸிகள் அனுமதிக்க அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI V. RAMAIAH : டாக்ஸிகளின் தேவைப்பற்றி அப்போதைக்கப்போது பரிசீலனை செய்யப்பட்டு போதுமான பெர்மிட்டுகளை ரீஜனல் டிரான்ஸ்போர்ட் அதாரிட்டி வழங்கிக் கொண்டிருக்கிறது. ஆனால் நகரத்தை பொறுத்தவரையில் பெர்மிட் வாங்கியவர்கள் எத்தனையோ பேர்கள் டாக்ஸிகளை விடாமல் அப்படியே வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அதனால் கொஞ்சம் காலதாமதம் ஏற்படுகிறது.

6th March 1961]

**Sri A. VEDARATHNAM** : டாக்ஸி பெர்மிட் வாங்கியவர்கள் அதை பயன்படுத்தவில்லையானல் ஒரு குறிப்பிட்ட கால எல்லைக்குள் அதை பயன்படுத்திக் கொள்ளவேண்டும் என்று வலியுறுத்தி அதற்குள் அவர்கள் டாக்ஸி விடவில்லையென்றால் பர்மிட் கொடுத்ததை ரத்து செய்து விட்டு அது வேண்டுமென்று விரும்புகிற மற்றவர்களுக்குக் கொடுக்க அரசாங்கம் முன்வருமா ?

**The Hon. Sri V. RAMAIAH** : விதிமுறைப்படி, ஒரு குறிப்பிட்ட காலம் வரை பொறுத்திருக்க வேண்டியிருக்கிறது. அதற்குள் டாக்ஸி ஓடாவிட்டால் அது ரத்தாகிவிடுகிறது. பின். தேவையைப் பூர்த்தி செய்ய இன்னும் பல மாதங்கள் ஆகிறது. இப்படியே தடைப்பட்டுக் கொண்டு போகிறது. அதில் சம்பந்தப் பட்டிருக்கக்கூடியவர்கள் தேவையை உணர்ந்து அதற்குத் தகுந்தாற்போல் டாக்ஸி விட முன்வருவதில்லை.

Mr. SPEAKER : Questions are over.

[*Note*.—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]

## II.—GOVERNMENT BILL.

### THE MADRAS ENTERTAINMENTS TAX (AMENDMENT) BILL, 1961.

The Hon. Sri R. VENKATARAMAN : Sir, I beg leave to introduce the Madras Entertainments Tax (Amendment) Bill, 1961.

Mr. SPEAKER : The question is—

'That leave be granted for the introduction of the Madras Entertainments Tax (Amendment) Bill, 1961.'

The motion was put and carried and leave was granted.

The Hon. Sri R. VENKATARAMAN : Sir, I introduce the Bill.

Mr. SPEAKER : The Bill is introduced.

## III.—GENERAL DISCUSSION ON THE BUDGET FOR THE YEAR 1961-62—*cont.*

Mr. SPEAKER : The hon. Member, Sri V. K. Ramaswamy Mudaliyar, will lead the discussion on the Budget for the year 1961-62.